# கொரோனா வந்திருக்கிறேன்!

மனிதா! நான் கொரோனா வந்திருக்கிறேன்!

என்னை கண்டு ஏன் பயம் கொள்கிறாய்?

உன்னை நான் கொல்வேன் என்று பயப்படுகிறாய்?

புறத்தில் நான் உனக்கு கொரோனா ஆகிறேன்.

அகத்தில் நான் உனக்கு மனசாட்சி ஆகிறேன்.

உண்மையில், நான் உன்னுள்ளேதான் உள்ளேன்.

கொல்லக்கூடிய கொரோனாவாக அல்ல!

உன்னை உனக்குக் காட்டிக் கொடுக்கும் மனோசாட்சியாக.

ஆம்! மனிதா!

என்னை நீ கண்டு கொள்ள வில்லை!

நான் உன்னைக் கண்டு கொல்ல வந்தேன்.

உன்னை நீ! உற்றுக்கவனி!...

ஆயிரமாயிரம் காடுகளை அழித்து, உன் சுயநலத்திற்காக விடுகள் கட்டினாய்.

அப்போதும் நீ... என்னைக் கண்டு கொள்ளவில்லை!

ஆயிரமாயிரம் பட்டுப் பூச்சிகளைக் கொன்று, பட்டாடைகள் உடுத்தினாய்.

அப்போதும் நீ... என்னைக் கண்டு கொள்ளவில்லை!

ஆயிரமாயிரம் விலங்குகளை கொன்று, திருவிழாவில் தினந்தோறும் தின்கிறாய்.

அப்போதும் நீ… என்னைக் கண்டு கொள்ளவில்லை!

ஆயிரமாயிரம் மரங்களை அழித்து, அதிலே காகிதங்கள் செய்தாய்.

அப்போதும் நீ… என்னைக் கண்டு கொள்ளவில்லை!

ஆயிரமாயிரம் பறவைகளை அழித்து, அலைபேசியில் அரட்டை அடித்தாய்.

அப்போதும் நீ… என்னைக் கண்டு கொள்ளவில்லை!

ஆயிரமாயிரம் ஆக்கங்கள் விட, ஆயிரமாயிரம் அழிவுகள் உண்டாக்கினாய்.

ஆனாலும், நீ… என்னைக் கண்டு கொள்ளவில்லை!

எனவே, நானே உன்னைக் கண்டு கொல்ல வந்தேன்.

என் வருகையால் உன் அழிவா?

உன் வருகையால் உலக அழிவா?

அனைத்து அழிவுக்கும் காரணமான நீ…

உன் அழிவைக்கண்டு மட்டும் கலங்கலாமா?

உன் உடலை புதைக்காமல் ஏன் எறிக்கிறார்கள்?

என்றாவது நீ யோசித்துப் பார்த்தாயா?

உன் மாமிசம் கூட மண்ணிற்கு தேவையில்லை.

அவ்வளவுதூரம், மண்ணை நீ மாசுபடுத்திவிட்டாய்.

மண்ணில் இருப்பதை உனக்கு மட்டும் சொந்தம் என்றாய்,

ஆதனால், அந்த மண் நீ எனக்கு சொந்தம் இல்லை என்கிறது.

மண்கூட உன்னை மதிக்கவில்லை!

ஆனால், மனிதன் என்று மமதைகொண்டாய்.

அனைத்தின் அழிவுக்கும் ஆர்வம் காட்டினாய்.

உன்னுடைய அழிவை உனக்கு காட்டினேன்.

உனக்கு வந்தால் மட்டும் வலி!

மற்றவைகளுக்கு நீ தந்தால், அது வலிமை!...

உன்னை நீயே உற்றுப்பார்!

பணத்துக்கு ஒரு நீதி!...

வீதிக்கு ஒரு ஜாதி!...

பெயருக்கு ஒரு வாழ்க்கை!...

பெருமைக்கு ஒரு கல்வி!...

அநீதிக்கு ஒரு ஆட்சி!...

என எல்லோரையும் ஏச்சி பிழைக்கும் நீ...

என்னைக்கண்டு மட்டும் ஏன் பயப்படுகிறாய்?

உனக்கு நீயே... ஏன் சிறைப்படுகிறாய்?

பஞ்சமா பாதகங்களை செய்த நீ…

பஞ்சபூதங்களைப் பற்றி அறிவாயா?

நிலம் - வசிக்க இடம் தந்தது.

நீர் - ருசிக்க தாகம் தீர்த்தது.

நெருப்பு - உணவு சமைக்க உதவி புரிந்தது.

காற்று - சுவாசிக்க மூச்சு தந்தது.

ஆகாயம் - அனைத்திற்கும் ஆதரவு அளித்தது.

ஆனால் நீயோ, பாவி!...

அனைத்தையும் பாழாக்கினாய்.

நிலத்தை மருந்தால் மலடு ஆக்கினாய்.

நீரை உன் கழிவால் களங்கப்படுத்தினாய்.

நெருப்பை எரிபொருள் என்று காசாக்கினாய்.

காற்றை கரும் புகையால் மாசு படுத்தினாய்.

ஆகாயத்தில் கோட்டைக்கட்ட ஆசைப்படுகிறாய்.

நீ… என்னை அறிய மறுத்ததால்,

நான்… உனக்கு மரணத்தை அறிய வைத்தேன்.

மரணத்தைக் கண்டு பயப்படும் மனிதா!

மரணம் என்பது, மருந்தின்றி வருவது.

மரணமற்ற வாழ்வுக்கு மருந்தொன்று உண்டு.

அதுவே, **மனசாட்சி** என்னும் மாமருந்துண்டு.

அதை, உன்னுள் நீ உணர்ந்துக் கொண்டு,

மரணமில்லா பெருவாழ்வு கண்டு!

மகிழ்சியுடன் பல்லாண்டு வாழ்வதைக் கொண்டு,

பஞ்சபூதங்களும் நிறைவாவதுண்டு.

நன்று!.

என்றும் அன்புடன்,

**சுவாமி பிரபஞ்சநாதன்.**

